[6th February 1959

**Sri V. M. SURENDRAM** : முன்பு தோடர்கள் பூமி வைத்துக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது பூமி இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அந்த நிலங்களை அவர்களுக்குத் திருப்பி விநியோகம் செய்ய சர்க்கார் முன்வருமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN** : இதற்குத் தனிக் கேள்வி போட்டால், பதில் சொல்லுகிறேன்.

**Sri V. M. SURENDRAM** : மந்திரியாருடைய ஸ்டேட்மெண்டில் " Grant of financial assistance on half-loan and half-grant basis at Rs. 150 for millet and other cultivation ". என்று இருக்கிறது. அந்தத் தோடர்களுக்கு உருளைக்கிழங்கு பயிரிட பூமி இல்லை. பூமி கொடுத்தால்தான் உற்பத்தி செய்யமுடியும். அவர்களுக்கு பூமி கொடுக்க சர்க்கார் முன்வருமா ?

**The Hon. Sri P. KAKKAN** : எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் நிலம் கொடுத்து வருகிறோம். நிலம் கொடுக்கப்பட்டவர்களுக்குத்தான் பயிரிட ரூபாய் கொடுக்கிறோம்.

**Sri V. V. RAMASWAMI** : சென்ற ஆண்டில் கவர்னர் உதகையில் பேசும்பொழுது " 175 acres of land would be shortly assigned to the Thodas. We hope that the Thodas would make the best use of the land and bring them under cultivation." என்று கலெக்டர் அவர்கள் சொன்னதாக அறிவித்தார். அப்படிப் பேசி ஒரு ஆண்டு ஆகிவிட்டது. அதன் பிரகாரம் அவர்களுக்கு நிலம் கொடுக்கப்பட்டதா ? கொடுக்கப்படவில்லையென்றால் அதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri P. KAKKAN** : இது சம்பந்தமாக நான் கவனித்துப் பதில் சொல்லுகிறேன்.

**Sri G. KRISHNAMOORTHY** : இப்பொழுது இந்தத் தோதவர்களைப் படம் பிடித்து 'இன்னும் இந்த மாதிரி நாகரீகத்தில் உள்ளவர்கள் இருக்கிறார்கள்' என்பதைக் காண்பிப்பதற்காகப் பத்திரிகைகளில் போடுகிறார்கள் அப்படிச் செய்யாமல் இருப்பதற்கு அரசாங்கம் வழி வகை செய்யுமா ?

**The Hon. Sri P. KAKKAN** : இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

*Bulls supplied to Harijan agriculturists*

* 5 *Q.*—Sri M. ETHIRAJALU : Will the Hon. the Minister for Public Works be pleased to place before the House a statement showing district-wise, the number of bulls, sewing machines, tools and implements supplied to Harijan agriculturists for the years 1956–57 and 1957–58?

The Hon. Sri P. KAKKAN : A statement[a] is placed on the table of the House.

**Sri M. ETHIRAJALU** : வாழ்க்கையிலே வசதியற்ற, பொருளாதாரத் துறையிலே முன்னேறாத, மிகவும் பின் தங்கிய சமூகத்திலுள்ள தொழிலாளர்களுக்கும் இவ்விதக் கருவிகளை வாங்கிக்கொடுக்க அரசாங்கத்திடம் ஏதாவது திட்டம் இருக்கிறதா ?

**The Hon. Sri P. KAKKAN** : இப்பொழுது ஹரிஜனங்களுக்கு மட்டும் தான் இந்தச் சலுகை கொடுக்கப்படுகிறது. கனம் அங்கத்தினர் இது பற்றிய தனி விவரங்கள் அறியவேண்டுமானால், தனிக் கேள்வி போடவேண்டும்.

---

[a] Printed as Appendix V on page 66_infra.

6th February 1959]

**Sri A. SUBRAMANYAM :** சென்ற 1957-58-ம் ஆண்டில் தஞ்சை, திருச்சி, சேலம், கன்னியாகுமரி ஆகிய ஜில்லாக்களில் உள்ள ஹரிஜன விவசாயிகளுக்கு மிகக் குறைந்த அளவில் விவசாயக் கருவிகள் வழங்கப் பட்டதாக குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதன் காரணம் யாது ? கருவிகள் வேண்டுமென்று அதிகமான விண்ணப்பங்கள் வரவில்லையா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** யார் யார் எந்தெந்த ஜில்லாக்களிலிருந்து விண்ணப்பிக்கிறார்களோ அவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது. இந்த ஜில்லாக்களைப்பற்றி முழு விவரம் தெரிய வேண்டுமானால், தனிக் கேள்வி கேட்டால் பதில் சொல்லுகிறேன்.

**Sri V. M. SURENDRAM :** நீலகிரி ஜில்லாவில் காளை மாடுகள் கொடுப்பதற்குப் பதிலாக ஹரிஜனங்களுக்கு வேறு ஏதாவது சாமான்கள் கொடுக்க அரசாங்கம் ஆலோசனை செய்யுமா ?

**The Hon. Sri P. KAKKAN :** இதுபற்றிப் பரிசீலனை செய்யப்படும்.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENTS. 3–10 p.m.

### (1) PANEL OF VICE-CHAIRMEN.

MR. CHAIRMAN : I have to announce to the House that, under rule 14 of the Madras Council Rules, I have nominated the following Members of the Council to be the panel of Vice-Chairmen for the Fourteenth Session of the Legislative Council under the Constitution :—

(1) Sri G. R. Damodaran.

(2) Dr. A. Chidambaranathan.

(3) Sri M. Ethirajalu.

(4) Srimathi K. B. Sundarambal.

### (2) DECISION OF THE BUSINESS ADVISORY COMMITTEE.

MR. CHAIRMAN : I have also to report to the House that at a meeting of the Business Advisory Committee held at 3-15 p.m. on 5th February 1959, the following programme of business of the Legislative Council has been decided upon :—

| | | |
|---|---|---|
| 6th February 1959 | Friday .. | Discussion on the Governor's Address. |
| 7th February 1959 | Saturday .. | |
| 9th February 1959 | Monday .. | |
| 10th February 1959 | Tuesday .. | |
| 9th February 1959 | Monday .. | Presentation of the Report of the Joint Select Committee on the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1959 (L.C. Bill No. 8 of 1958). |